22nd September 1958] [Sri G. Gomathisankara Dikshitar]

தான், இம்மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. இதில் சில குறைகள் இருக்கலாம். பாதுகாப்பிற்காக சில க்ளாஸ்கள் போடப்பட்டிருக்கலாம். ஆனாலும், கிராம முன்னேற்றத்திற்காக, கிராம மக்கள் என்னவெல்லாம் செய்ய வேண்டுமோ அவைகளையெல்லாம் அவர்கள் செய்து கிராமங்களை முன்னேற்றம் அடையச் செய்ய இம்மசோதாவில் அதிகமான வசதிகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. கிராமப் பஞ்சாயத்துகளும், பஞ்சாயத்து கௌன்ஸில்களும் என்னென்ன கடமைகளைச் செய்ய வேண்டுமோ அவைகளை செய்வதோடு இன்னும் மிக முக்கியமான ஒரு விஷயத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன். மஹாத்மாஜி, நம் நாட்டு மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வு அடைய வேண்டும், தார்மீக வாழ்க்கை நிலைநிறுத்தப்படவேண்டுமென்பதற்காக மதுவிலக்கு இயக்கத்தை நடத்தினார்கள். அதை இந்த பஞ்சாயத்து அலுவல்களில் ஒரு முக்கியமான அலுவலாக சேர்க்கவேண்டுமென்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன். அதோடு பஞ்சாயத்து கௌன்சிலில் அங்கம் வகிக்கும் சட்டசபை பிரதிநிதிக்கும் வோட்டு அளிக்கக் கூடிய உரிமையும் அளிக்கப்படவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பஞ்சாயத்து முறையானது, நம் நாட்டில் தொன்றுதொட்டு நம நாட்டின் கலாசார சின்னமாக விளக்கக்கூடிய முறையாகும். பிரிட்டிஷ் அரசாங்க காலத்தில் பஞ்சாயத்து முறை துர்விநியோகம் செய்யப்பட்டு வந்தது. பஞ்சாயத்தின் உண்மையான லட்சியங்களையும், கடமைகளையும் விளக்கிக் காட்டுவதற்காகவே இந்த பில்லை கொண்டு வந்திருக்கிறோம். இதற்கு முன்னால் பஞ்சாயத்து ஆக்ட் நிறைவேற்றிய காலத்தில், அது விளைத்த தீமைகளை எல்லாம் நன்கு உணர்ந்து இந்த புதிய மசோதா மூலம், கிராமங்களில் இருக்கக் கூடிய கட்சி மனப்பான்மையையும், ஜாதி மனப்பான்மையையும் இன்னும் இதர வித்தியாசங்களையும் களையத் தகுந்த முறையில் இம்மசோதா நன்கு வேலை செய்யும் என்று நான் எதிர்பாக்கிறேன். கிராமத்தில் எல்லா விதமான முன்னேற்றங்களையும் நடத்துவதற்குரிய அதிகாரங்கள் பஞ்சாயத்திற்கு அளிக்கப்பட்டிருக்கிறது. அப்படி அளிக்கப்படாமல் இருந்தால் அவைகளையும் சேர்த்து அமைத்து அதன் மூலம் கிராம முன்னேற்றத்திற்கான காரியங்களை செய்வதற்கு இந்த மசோதா உதவியாக இருக்கச் செய்வதோடு, நடைமுறையில் இது செயல்படும்போது இதை நன்கு கவனித்து இதன் லட்சியத்தை கிராம மக்கள் பெறச் செய்வதற்கு ஆவன செய்யவேண்டுமென்று நான் நமது அரசாங்கத்தை கேட்டுக்கொள்கிறேன். பஞ்சாயத்து கௌன்ஸிலிற்குள் உட்பட்டிருக்கிற எல்லா பஞ்சாயத்துகளும் சமநிலையில் பொருளாதார வசதி செய்து கொடுப்பதற்காக வேண்டி ஒரு பஞ்சாயத்து கௌன்ஸில் என்று ஒன்று அமைத்து எல்லா கிராமங்களுக்கும் முன்னேற்றகரமான பாதையில் செல்ல வழி வகுக்கப்பட்டிருக்கிறது. அதற்காகத்தான் இந்த பஞ்சாயத்து கௌன்ஸில் அமைக்கப்பட்டிருக்கிறது என்று உணர்ந்து கொண்டு, இம்மசோதா மக்களுக்கு நல்ல முறையில் பயன் அளிக்கும் வகையில் பொது மக்களும் சேவை உணர்ச்சியோடு இம்மசோதா நல்ல முறையில் செயல்பட ஒத்துழைக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, எனக்கு இதைப் பற்றி பேசுவதற்கு வாய்ப்பு அளித்த கனம் உதவி சபாநாயகர் அவர்களுக்கு மீண்டும் ஒருமுறை எனது நன்றியைத் தெரிவித்துக் கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER: The House will now adjourn and meet again at 9 a.m. to-morrow.

The House then adjourned.

VI.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

*Reports and other papers.*

* 43. *The Madras Appropriation (No. 5) Bill*, 1958. (L.A. Bill No. 31 of 1958).

* 44. *The Madras Appropriation (No. 4) Bill*, 1958. (L.A. Bill No. 32 of 1958).